ரூ. 5.00

# மக்கள் சிந்தனை

தமிழ் ஆண்டு 2040
மாசி - பிப்ரவரி 2009




## ஈழத்தில் எரியும் தீயை அணைக்க ஒன்றுபடுவோம்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :
website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

தமிழ்ஆண்டு 2040 | மாதம் : மாசி
மலர் : 24 | இதழ் : 2




## ஈழத்தில் எரியும் தீயை அணைக்க
## சாதி, சமய, அரசியல் அடையாளங்களுக்கு அப்பால்
# நாம் தமிழர் என்று ஒன்றுபடுவோம்!

ஈழம் எரிந்துகொண்டிருக்கிறது. நம் கண்கள் விழிநீர் சொரிந்துகொண்டிருக்கின்றன. இலங்கைத் தமிழர் பிரச்சனை பற்றி அண்ணா இருக்கிற காலத்தில் பேசும்போது, ஒருவர் சொன்னார் "அண்டை நாட்டின் பிரச்சனையைப் பற்றி நாம் எப்படி பேசுவது?" "அடுத்த வீட்டுக்காரன் குடும்பப் பிரச்சனையில் நாம் எப்படி தலையிடுவது?" என்று கேட்டார். அண்ணா சொன்னார். "அடுத்த வீட்டுக்காரன் தன் மனைவியை அன்பாய் நடத்திக் கொண்டிருந்தால் நாம் தலையிடமுடியாது. அடுத்த வீட்டுக்காரன் தன் மனைவியின் கழுத்தை நெரித்தால் நாம் எப்படி வேடிக்கை பார்க்க முடியும்" என்று! அந்த நிலைதான் இன்றைக்கு இருக்கிறது. அதனால் தான் அண்ணா, "பதவி என்பது தோளில் போட்டிருக்கிற துண்டு மாதிரி. அதே நேரத்தில் கொள்கை என்பது இடுப்பில் கட்டியிருக்கிற வேட்டி மாதிரி" என்று சொன்னார்கள். "நாம் பதவியைத் துறக்க தயாராக இருப்போம். ஒருபோதும் கொள்கையை இழக்கத் தயாராக இருக்க மாட்டோம்" என்றார்களாம்.

அண்டை நாட்டில் - இலங்கையில் போர்க்களத்தின் நியதிகள், விதிகள் மீறப்படுகின்றன. காலம் காலமாக நடந்த யுத்தங்களில் கற்காலத்தில் இருந்து இக்காலம் வரை ஆயுதங்கள் மாறியிருக்கின்றன. ஆனால் போரின் முறைகள் மாறவில்லை. போர்க்களத்திற்கென்று ஒரு நியதி உண்டு. விதி உண்டு. ஆனால் அந்த விதி எல்லாம் அங்கே மீறப்படுகின்றன.

இலங்கையில் இராம இராவண யுத்தம் நடந்தது. இராம இராவண யுத்தத்தில் ஆயுதமில்லாத நிலையில் இராவணனைப் பார்த்து "இன்று போய் நாளை வா!" என்று சொன்னான் இராமன். அதேபோல குருச்சேத்திரப் போர் நிகழ்ந்தது. அந்தப் போர்க்களத்தில் கர்ணன் போரின் நியதியை மீறியும் இரக்கத்தோடு நடந்து கொண்டான். ஆனால் போர் அறத்தை மீறுகிற நிலைதான் இலங்கையில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. குழந்தைகள் கொல்லப்படுகிறார்கள். மருத்துவமனையில் கொத்துக் கொத்தாய் குண்டுகள் வீசப்படுகின்றது. பாதுகாப்பு வளையம் என்ற பெயரில் மக்களை வதைக்கிறார்கள். அதையே மரண வளையமாக ஆக்கிவிடுகிறார்கள். இந்தப் பெருங்கொடுமையை உலகத்தின் எந்த மூலையிலும் சந்தித்திருக்க முடியாது.

போரற்ற உலகத்தை நிறுவ வேண்டுமென்று உலகம் முழுவதும் எதிரொலித்துக் கொண்டிருக்கிற நேரமிது. இந்த நேரத்தில்தான் உலகத்தின் எல்லா நாடுகளுக்கும் உதாரணமாக விளங்கியது ஒரு சின்னஞ்சிறிய நாடு. அந்த நாட்டின் மீது ஒரு வல்லரசு அணு ஆயுதத் தாக்குதலை நிகழ்த்தியது. அணு ஆயுதத் தாக்குதலுக்குள்ளான அந்தச் சின்னஞ்சிறிய நாடு நிலைகுலைந்து போகவில்லை. அந்தச் சின்னஞ்சிறிய நாடு ஒரு சபதத்தை எடுத்துக் கொண்டது. எங்களுக்கு அழிவைத் தேடித்தந்த அரசை நாங்கள் போர்க்களத்தில் சந்திக்க மாட்டோம். தொழில் வணிகக் களத்தில் தான் சந்திப்போம் என்ற சூளுரையை எடுத்தது. சில பல ஆண்டுகளில் உலகத் தொழில் வணிகச் சந்தையில் எந்தப் பொருளை எடுத்தாலும் "Made in Japan" ... "Made in Japan" என்று பொறிக்கப் பட்டிருந்தது. ஒரு பெரிய வல்லரசை எதிர்த்துத் தொழில் வணிகக் களத்தில் ஒரு சின்னஞ்சிறிய நாடு செய்த சாதனை உலக அரங்கிற்கு ஒரு உதாரணம். இன்றைக்கு உலக நாடுகளில் மிகப் பெரிய நாடாக விளங்கிக் கொண்டிருக்கிற வல்லரசாய் விளங்குகிற அமெரிக்காவில் கூட பிரிட்டனின் காலனி ஆதிக்கத்தின் கீழ் என்றும் நலமாக வாழ்வோம் என்றுதான் அமெரிக்கர்கள் பலரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில் "பகுத்தறிவு" என்ற 47 பக்கமுடைய நூல் அமெரிக்க தேசத்தில் செய்த புரட்சியின் விளைவாகத் தான் அமெரிக்க காங்கிரஸ் கூடி உடனடியாக சுதந்தர தேசத்திற்காக பிரகடனம் செய்தது. அந்த சுதந்திர அமெரிக்காப் பிரகடனத்தால் தான் பிரிட்டனின் காலனி ஆதிக்கத்தில் இருந்து விடுபடுவோம் என்று மூன்று மாதங்களிலே சுதந்திர அமெரிக்கா

சந்தித்தது. அதே சுதந்திர அமெரிக்காவில் தான் உள்நாட்டு யுத்தம்! காலம் காலமாய் மக்களை அடிமைப்படுத்தி, கொடுமைப்படுத்தி வைத்திருந்த நிலை. அந்த நிலையையும் மாற்றிக் காட்டினர். தன்னுடைய வெள்ளை மாளிகையின் முன் திரண்டிருந்த மக்களின் முன்னால் ஒற்றைக் கையெழுத்திட்டு நாற்பது லட்சம் கறுப்பின மக்களை விடுவித்தார் ஆப்ரகாம் லிங்கன்.

இந்த மகத்தான புரட்சியெல்லாம் போரற்ற உலகில் சாதிக்க முடியும் என்பது தான் காலம் நமக்கு நிருபித்துத் தந்த பாடம். இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட அழிவுகளைத் தடுத்து நிறுத்தி இருந்தால் இந்த உலகத்தில் வாழுகிற ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் ஒரு வீட்டைக் கட்டித் தரலாம். ஐயாயிரம் மக்கள் வசிக்கிற கிராமத்தில் ஒரு பொதுச் சுகாதார மருத்துவமனையைக் கட்டித் தரலாம் என்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன. உலகத்தில் போரினால் நிரந்தரமான அமைதி இல்லை என்பது உலக நாடுகள் நமக்கு கற்றுத் தந்த பாடம். அந்தப் பாடத்தைத் தான் இலங்கை அரசு இன்னமும் உணரமுடியாத நிலையில் இருக்கிறது. அதிலும் இலங்கை அரசு சார்ந்திருக்கிற நெறி உலகத்திற்கு அகிம்சையையே போதித்திருக்கிற நெறி. இந்நெறிக்காக புத்தர் பெருமான் தம் வாழ்க்கையையே ஒப்படைத்தார். மரணத்தின் தருவாயில் ஒரு எளிய சீடன் அவரிடம் சொன்னான். "என் வீட்டில் ஒருநாள் உணவை உண்ணுங்கள்" என்றான். எந்த உணவையும் தரமுடியாத அந்தச் சீடன் விஷக் காளானை உணவாகத் தந்தான். அதையும் உண்டுவிட்டு புத்தர் சொன்னார். "இவன் தான் புத்தருக்குக் கடைசியாக உணவளித்தவன் என்று உலகத்திற்கு அறிவியுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார். அந்த நெறியைத் தழுவுகிற நாடுதான் இலங்கை. அசோகர் போர்க்களத்தை விட்டு விலகி பௌத்த நெறியைத் தழுவினார். போரற்ற உலகம் வேண்டும் என்றுதான் அவர் பௌத்த நெறியைத் தழுவினார். அந்த நெறியைத் தழுவுகிற ஒரு அரசு இன்றைக்கு மக்களை வேட்டையாடுவதையே தன் நெறியாகக் கொண்டிருப்பதுதான் வேதனை. இன்றைக்கு நம்மிடம் இருக்கக்கூடிய இந்திய மக்களுக்குக் குறிப்பாகத் தமிழ் மக்களுக்கு இருக்கக்கூடிய நெருக்கடியான நிலையாகும். உலகத்தின் எல்லாப் போர்க்களத்தின் தீர்க்கத் தரிசனத்திலும் தெளிவாய்த் தெரிந்தது இதுதான்.

நபிகள் பெருமான் மெதினாவில் இருந்து மெக்காவுக்குப் போனார். மெதினாவிலிருந்து மெக்காவுக்குப் போகிற பயணத்தின்போது ஒரு மிகப்பெரிய வெற்றியை சுமந்து கொண்டு போனார். அப்போது மெக்கா நகரத்து மக்கள் துன்பப்பட்டு அச்சப்பட்டு இருந்த நேரத்தில் நபிகள் பெருமான் "என்னிடம் நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்" என்றார்.

உலகத்தின் சமரச உடன்படிக்கைகளில் ஒப்பற்ற சமரச உடன்படிக்கை என்பது ஹுதைபியா உடன்படிக்கைதான். ஒரு வெற்றியின் உச்சத்தில் இருப்பவர் விட்டுக் கொடுக்கிற மனப்பான்மையைத் தான் நபிகள் பெருமான் உ லகத்திற்கு அடையாளம் காட்டினார். அந்த நெறியைத் தான் இன்றைக்கு உலக நாடுகள் குறிப்பாக நம் அண்டை நாடுகள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

ஏசு பெருமான் சொல்வார். சிலுவையில் அறைகிற கடைசி நேரம். போர்க்களத்தில் இருந்து கொண்டு வேதாந்தம் பேசுகிறாயா? என்று நீங்கள் எண்ணலாம். பகைவனை எத்தனை முறை மன்னிப்பது? ஏழு முறையா?... எழுபது முறையா?... ஏழேழு எழுபது முறையேனும் மன்னிக்கலாம் என்று ஏசுபெருமான் சொல்வார்.

தன்னைச் சிலுவையில் அறைந்த நேரத்தில் முகத்தில் காரி உமிழ்ந்த நேரத்திலும் கூட "இவர்கள் இன்னதென்று அறியாது செய்கின்றார்கள். இவர்களை மன்னித்து விடுங்கள்" என்று சொல்வார். இதுதான் அருளாளர்கள் காட்டிய தடம்.

ஆனால் அந்தத் தடத்தைத் தான் இன்றைக்கு மனித நேயமுடையவர்கள் தூக்கிச் சுமக்க வேண்டிய காலக் கட்டாயத்தில் இருக்கிறோம்.

உலகத்தை இறைவன் படைத்தான் என்று மார்க்கம் சொல்லும். அப்படி படைத்தபோது உலகத்தில் அதிர்வுகள் ஏற்பட்டன. அப்படி அதிர்வுகள் ஏற்பட்டபோது இறைவன் அந்த பூமிப் பந்தின் மீது மலையைப் படைத்தான் என்று சொல்வார்கள். மலையில் அதிர்வுகள் அடங்கின. அப்போது வானத் தூதுவர்கள். "உம்முடைய படைப்பில் மலைதான் வலிமை வாய்ந்ததா" என்று கேட்டார்களாம். "ஏன்.? பாறையைச் செதுக்குகின்ற இரும்பு இருக்கின்றதே அது வலிமை வாய்ந்ததுதான்" என்று இறைவன்

பகர்ந்தானாம். அப்படியென்றால் "இரும்புதான் வலிமை வாய்ந்ததா?" என்று கேட்டார்களாம். "இல்லை. இரும்பை உருக்குகின்ற நெருப்பு இருக்கின்றதே" என்றானாம் இறைவன். "நெருப்புதான் வலிமை வாய்ந்ததா?" என்றார்களாம். "இல்லை. நெருப்பை அணைத்து விடுகின்ற நீர் இருக்கின்றதே" என்றானாம். "அப்படியென்றால் நீர்தான் வலிமை வாய்ந்ததா?" என்றார்களாம். "இல்லை. நீரைக் கிளர்ந்தெழச் செய்கின்ற காற்று இருக்கின்றதே?" என்றானாம் இறைவன். "அப்படியானால் காற்று தான் வலிமை வாய்ந்ததா?" என்றதற்கு, "இல்லை. வலது கை கொடுப்பதை இடது கை அறியாமல் எவன் கொடுக்கின்றானோ அவன்தான் எல்லாவற்றையும் விட ச்சிறந்தவன்" என்று இறைவன் கூறினானாம்.

அந்த நிலையில் தான் இன்றைக்கு மனித நேயத்தோடு மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் அவர்கள் எல்லாப் பிரச்சனைகளையும் எடுத்துச் செல்கின்றார்கள். அந்தப் பிரச்சனைகளில் இலங்கைப் பிரச்சனை இன்று நேற்றல்ல. 1956ல் சிதம்பரத்தில் நம்முடைய பேரறிஞர் அண்ணா காலத்தில் கலைஞர் முன்மொழிந்ததார் ஒரு தீர்மானம். அந்தத் தீர்மானத்தைத் தான் முதன் முதலாக ஈழத் தமிழர் பிரச்சனை பற்றி அண்ணாவும் கலைஞரும் இணைந்து தமிழகத்து மக்களின் நிலைபாட்டுக்குக் கொண்டு வருகிறார்கள். அன்றிலிருந்து தொடங்கி 1958ல் இன்றைக்கு மாநகரமெல்லாம் நடக்கிற பேரணியைப் போல் பேரறிஞர் அண்ணா தலைமையில் பேரணி. 1977ல் சென்னையில் பேரணி. 1985ல் தமிழகம் முழுவதும் மறியல். இப்படி தொடர் போராட்டமாய் மக்களிடையே விழிப்புணர்வை ஊட்டுகிற நிலைப்பாட்டில் "டெசோ" (TESO) என்ற அமைப்பைக் கூட கலைஞர் கண்டார்கள். அந்த அமைப்பிற்குப் பிறகு, தொடர்ந்து ஈழத் தமிழர் பிரச்சனையை இலங்கை மக்களின் வாழ்வியல் உரிமைப் பிரச்சனையை, சொந்த மக்களின் பிரச்சனையைப் போல் எடுத்துச் சென்றார்கள். அந்தப் பிரச்சனையின் நிலைப்பாட்டில் ஆட்சியை இழக்க நேரிட்டது. தமிழக சட்ட மன்ற உறுப்பினர் பதவியை இழக்க நேரிட்டது. அவற்றையெல்லாம் தாண்டி இன்றைக்கும் தொடர்ந்து அந்த நிலைப்பாட்டை எடுத்துச் சென்று கொண்டிருக்கிறார்கள்.

அன்புக்குரிய நண்பர்களே, இந்தச் சூழ்நிலையில் உலகம் முழுவதும் அமைதியையும், அன்பையும் நிலைநாட்ட வேண்டிய தருணத்தில்தான்

நம்முடைய இந்தியாவிற்கு அருகே இருக்கக்கூடிய நேபாளத்தில் நேபாள மண்ணில் மன்னர் ஆட்சி மறைந்தது. மாவோயிஸ்டுகள் தாங்கிய ஆயுதப் போராட்டம் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. எப்படி முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது?.... அது மக்கள் ஆட்சி முறைக்குத் திரும்பியது. ஆயுதம் தாங்கிய போராட்டம் அமைதி வழிக்குத் திரும்பியதில் இந்தியாவின் பங்களிப்பு மகத்தானதாக இருக்கிறது. அதே பங்களிப்பை இன்றைக்கு ஒளிக்கீற்று தோன்றியதைப் போல 48 மணி நேர போர் நிறுத்தத்தில் நாம் உணர முடிந்தது.

ஆனால் இன்னமும் தொடர் முயற்சிகள் தேவைப்படுகின்றன. தொடர்ந்து நினைவூட்டுகள் தேவைப்படுகின்றன. தொடர்ந்து நம்முடைய செயல்பாடுகள் தேவைப்படுகின்றன. உலகம் முழுவதையும் ஆட்டிப்படைத்த பிரிட்டன் இந்தியாவில் தோற்றது ஆயுத போராட்டத்தால் அல்ல. அமைதிப் போராட்டத்தால் தான். இரும்புக் கவசம் அணியாது, இதயத்தை அன்புக் கவசத்தால் அணிந்து கொண்ட மகாத்மா காந்தியடிகளிடம் தான் பிரிட்டன் தோற்றுப் போனது. வெள்ளையர்கள் மன்னர்களைத் தோற்கடித்தார்கள். பீரங்கிகளால் உலகத்தை ஒரே குடை கீழ் கொண்டு வர ஆசைப்பட்டார்கள்.

சூரியன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யம் என்று தங்கள் ஆட்சியைப் பிரகடனம் செய்தார்கள் இங்கிலாந்துக்காரர்கள். கவசம் அணியாத, குண்டு துளைக்காத காரில் பவனி வராத சாதாரண சாமானியனாய் இதயத்தில் அன்புக் கவசம் ஏந்திய மகாத்மா காந்தியடிகளிடம் தான் வெள்ளையர்கள் தோற்றுப் போனார்கள். இது ஒரு வரலாற்றின் அடையாளம். இந்தியா கருணையின் பூமி. இது புத்தரை ஈந்த பூமி. இந்த பூமியிலே நின்றுதான் உலக நாடுகளுக்கு நாம் ஒரு உதாரண நாடாய் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். வேறுபாடுகள் இருக்கலாம். முரண்பாடுகள் இருக்கலாம். ஆனால் அந்த முரண்பாடுகளுக்கிடையேயும் மனிதத்தை சுமக்கிறவர்கள் தமிழகத்திலே மட்டும்தான் இருக்கிறார்கள் என்பதே என்றைக்கும் காலம் தருகிற பாடம்.

அதனால் தான் அண்டங்களும், கண்டங்களும் விரிந்து பரந்து கிடந்த காலத்தில் ஒற்றைக் குரலில் தமிழன் ஒலித்தான். செல்போனும், சின்னத்திரையும் இல்லாத போது, "யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்ற தமிழ் மந்திரத்தை உலகத்திற்கு அளித்தான். அந்த நிலைப்பாட்டில் தான்

இன்றைக்கு அன்பின் தடத்தில் செல்ல வேண்டும். நம்முடைய அண்டைய நாட்டின் அமைதி நம்முடைய மகிழ்ச்சியாய் இருக்கிறது. போரால் ஏற்படுகிற அமைதி மயான அமைதி தான். ஆனால் போரற்ற உலகின் மூலம் நிறுவப்படுகிற அமைதிதான் நிரந்தர அமைதி. நிரந்தர மகிழ்ச்சி. அதை உருவாக்கத்தான் முத்தமிழறிஞர் முதல்வர் கலைஞர் அவர்கள் சிந்தித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நம்முடைய எண்ணமெல்லாம் இலக்கெல்லாம் இலங்கையில் சிக்கிக் கொண்டு தவித்துக் கொண்டிருக்கிற அப்பாவி மக்கள் காப்பாற்றப்பட வேண்டும். அவர்கள் கண்ணீர் துடைக்கப்பட வேண்டும். செந்நீர் சிந்துகின்ற அவர்கள் வாழ்வு மாற்றப்பட வேண்டும். அந்த வாழ்வு நோக்கிய பயணத்தில் நாம் வசைபாடுவதையெல்லாம் விட்டு விட்டு நம்முடைய இலக்கு என்பது இலங்கைத் தமிழ் மக்களின் அமைதிதான் என்று இன்றைக்குக் கூட முதல்வர் அவர்கள் ஒரு செய்தி விடுத்திருக்கின்றார்கள். கட்சி அடையாளங்களை மறந்து விடுவோம். சாதி அடையாளங்களைத் துறந்துவிடுவோம். நாமெல்லாம் தமிழர்கள் என்ற நிலையில் உலகத் தமிழர்களின் வாழ்வு சிறக்க இலங்கைத் தமிழர்களின் நலம் காக்க எல்லா அடையாளங்களையும் துறந்து விட்டு ஒற்றைக் குரலில் ஒலிப்போம். அந்தக் குரலே தமிழரின் குரல் என்ற பாதையில் பயணம் செய்வோம்.

அந்தப் பாதையே இலங்கைத் தமிழரின் வாழ்வுக்குரிய பாதையாக இருக்கும். அந்தப் பாதையில்தான் தாம் நலிவுற்ற நிலையிலும் மருத்துவமனையில் சோர்ந்திருந்த நேரத்திலும், பலமணி நேரம் பலதரப்பு மக்களுடனும், சமயச் சானறோர்களுடனும் உரையாடி இலங்கைத் தமிழர் பிரச்சனையில் அமைதி காக்கப்பட வேண்டும். நிரந்தரமான அமைதி வேண்டும் என்பதற்காக எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருக்கிறோம் என்று மருத்துவமனையில் படுக்கையில் இருந்துகொண்டு வேண்டுகோள் விடுத்துக் கொண்டிருக்கின்ற முதல்வர் அவர்கள் நினைத்திருக்கின்ற அந்த செயலாக்கத்தை நனவாக்க இலங்கைத் தமிழர் நலவுரிமைப் பேரவை மூலம் எல்லா அடையாளங்களுக்கும் அப்பாற்பட்டு ஒன்றாய் இணைந்து பணியாற்றி இலங்கைத் தமிழர் வாழ்வில் நல் அமைதியும், நல் மகிழ்ச்சியும் நிலவ நாமெல்லாம் இணைந்து பாடுபடுவோம்! ஈழத்தில் எரியும் தீயை, கரங்கள் இணைந்து விழிநீர் சொரிந்து அணைப்போம் வாரீர், வாரீர்

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## ஒழிபியல்

அறத்துப்பால், பொருட்பாலில் சொல்லாமல் விடப்பெற்று எஞ்சிநிற்பவைகளைக் கூற ஒழிபியல் என்று இயல் அமைத்துக் கொண்டார். ஒழிபியலில் "சமூகம்" அதிகமாகப்பேசப்படுகிறது.

## 96. குடிமை

குடிமை : ஒருவருடைய வழிவழித் தலைமுயையாக வரும் குடிமரபு. பிறிதொன்று நாட்டில் குறிக்கப்பெறும் குடி அமைப்பு. இவ்விரண்டும் ஏற்புடையனதான். ஏற்புழிக் கொள்ள வேண்டும். இன்று பழைய தடங்களின் வழியில் "குடும்பத் தலைமுறை குடிமரபே" ஏற்றுக் கொள்ளப்பெறுகிறது. இன்று நமது நாட்டில் "குடிமைச் சீட்டு", "குடிமைப்பயிற்சி" என்ற வழக்குகள் "இந்தியக் குடியினர்" என்பதையே குறிக்கின்றன.

*இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல்பாகச்*
*செப்பமும் நாணும் ஒருங்கு.* (951)

செம்மையும், நாணமும் உயர்குடிப் பிறந்தாரிடத்திலேயே இயல்பாக உண்டு. பிறரிடத்தில் இயல்பாகவே இல்லை. செப்பம் : சொல்லும் செயலும் ஒன்றாக அமைவது நாணம் : பழிபாவங்களுக்கு அஞ்சுதல்.

*ஒழுக்கமும் வாய்மையும் நாணமும் மூன்றும்*
*இழுக்கார் குடிப்பிறந் தார்.* (952)

உயர்குடியில் பிறந்தார் நல்லொழுக்கம், பொய் சொல்லாமை, நாணம் இம்மூன்றும் வழுவார்; காத்து வாழ்வர்.

"நாணும்" என மீண்டும் கூறப் பெற்றமையால் ஒழுக்கம், பொய் சொல்லாமை, செப்பம் ஆகியன யாவும் நாணம் என்ற நல்லியல்பின் வழியே அமையும் என்ற குறிப்புணர்த்தியவாறு

*நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்*
*வகையென்ப வாய்மைக் குடிக்கு.* (953)

உயர்குடிப் பிறந்தார்க்குப் புன்முறுவல் பூத்த முகத்துடன் ஈகைப் பண்பும் இன்சொல்லும் மற்றவர்களை இகழாமையும் நான்கும் உரியனவாகும்.

இரப்பாரை இகழ்ந்து நோக்கிக் கடுஞ்சொற்களுடன் கொடுத்தால் அது ஈகையன்று.

*அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்*
*குன்றுவ செய்தல் இலர்* (954)

உயர்குடியில் பிறந்தார் அடுக்காக உள்ள கோடி செல்வம் பெறினும், குடிப்பிறப்புக் குன்றும் இழி செயல்களைச் செய்யார்.

"கோடி பொருளினும் குடிப்பண்பு பெரியது"

*வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி*
*பண்பின் தலைப்பிரிதல் இன்று.* (955)

பழங்காலந்தொட்டு வழிவழி வருட் குடிமரபினர் வழங்குவது சுருங்கிய நிலையிலும் பண்புடைமையிலிருந்து நீங்கார்.

"கொடுப்பது சுருங்குதலே உயர் குடியினருக்கு வறுமை"

*சலம்பற்றிச் சால்புஇல செய்யார்மாசு அற்ற*
*குலம்பற்றி வாழ்தும்என் பார்.* (956)

குற்றமிலா நற்குடிப்பிறந்து வாழும் பெற்றியுடையார் தாழ்வு வந்துழியும் வஞ்சனை செய்யார். நேரடியான வாயில்கள் மூடப்பட்டுழி, வஞ்சனை வாயில்களத் தேடுவது இயற்கை. ஆயினும் நற்குடிப் பிறந்தார் வஞ்சனை செய்யார் என்பது வலியுறுத்தியவாறு.

*குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்*
*மதிக்கண் மறுப்போல் உயர்ந்து.* (957)

ஆகாயத்தில் உள்ள சந்திரனிடத்தில் உள்ள கருப்புப்போல, நற்குடிப் பிறந்தாரிடம் காணப்படும் குற்றம் விளங்கித் தோன்றும்.

உயர்ந்த குடியின் கண் தோன்றும் சாதாரணக் குற்றமும் விளங்கித் தோன்றும். ஆதலால் விழிப்புத் தேவை என்பதை உணர்த்தியது.

*நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்*
*குலத்தின்கண் ஐயப் படும்* (958)

உயர்குடிப் பிறந்தான் ஒருவனிடம் நலம் பயக்கும் பண்புகளுக்கு மாறான இயல்புகள் தோன்றினால் அவன் குடிப்பிறந்த குடிமரபு ஐயத்திற்குரியதாகும்.

உயர்குடிப் பிறந்தான் ஒருவன், தன் தவறால் தன்னுடைய குடியை ஐயத்திற்குரியதாக ஆக்க வேண்டாம் என்றவாறு.

*நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்*
*குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்* (959)

படுத்துக் கிடந்த நிலத்தின் இயல்பைக் கால்கள் காட்டும். அதுபோல நற்குடிப் பிறந்தாரை அவர்தம் வாய்ச் சொல் காட்டும்.

நிலத்தின் புழுதி அல்லது இயல்பு கால்களில் ஒட்டுதல் வழி புலப்படும். அதுபோல் நற்குடிப் பிறந்தாரை அவர்தம் சொற்கள் புலப்படுத்தும். நெஞ்சு = நிலம்; சொல் = கால்.

*நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்*
*வேண்டுக யார்க்கும் பணிவு.* (960)

ஒருவன் நலம் வேண்டுவானாயின் நாணுதலை விரும்ப வேண்டும். உயர்குடிப் பிறப்பு வேண்டுவானாயின் எல்லோர்க்கும் பணிதல் வேண்டும்.

*(தொடரும்)*

சிந்திக்கத் தூண்டாத கல்வி, கேள்வி. ஊமை வாய்மொழி. செயலைத் தூண்டாத சிந்தனை, நறுமணம் பரப்பாத மலர். செயலாகாத சிந்தனை, கறிக்குதவாத ஏட்டுச் சுரைக்காய். மௌன பாஷை பேசும் ஊமைப்பாடல். அடுப்பில் ஏற்றி வைக்காத உலைப்பானை உணவுக்கு உதவாததைப் போலச் செயலாகாத சிந்தனை பலன் தராது.

**- பொன்னம்பல அடிகளார்**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# பெரியபுராணம் புலப்படுத்தும் வாழ்க்கைநெறி

(புலவர். ச.மு. விமலானந்தம்)

## 11. உள்ளமே உயர்ந்த கோயில்

வாயிலார் நாயனார் மயிலாப்பூர் என்ற மாண்புடைய தலத்தில் தோன்றினார். அவர்தம் உள்ளத்தைக் கோயிலாக்கி, அதில் இறைவரை எழுந்தருளச் செய்து, ஞான விளக்கேற்றி, அழிவற்ற ஆனந்தமாகிய நீரால் திருமஞ்சனமாட்டி அன்பு அமுதைப் படைத்து அர்ச்சனை செய்து வந்தார்.

இதனைச் சேக்கிழார் கீழ்வருமாறு பாடுகிறார்.

*"மறவாமை யான்அமைத்த மனக்கோயில் உள்ளிருத்தி*
*உறவாதி தனையுணரும் ஒளிவிளக்குச் சுடரேற்றி*
*இறவாத ஆனந்தம் எனுந்திரு மஞ்சனம் ஆட்டி*
*அறவாணர்க் கன்பென்னும் அமுதமைத்தர்ச் சனைசெய்வார்"*

புண்ணியத் தொண்டரான வாயிலார்; அண்ணலார் தமக்கு அன்பினால் நிறைவழிபாட்டை நெடுநாள் செய்து, பின் சிவனடி நிழலில் சிறப்புடன் திகழ்ந்தார்.

சேக்கிழார் வாயிலாரை,

*"நீராருஞ் சடையாரை நீடுமன ஆலயத்துள்*
*ஆராத அன்பினால் அருச்சனைசெய் தடியவர்பால்*
*பேராத நெறிபெற்ற பெருந்தகையார்"*

என்று இனிதாய்ப் போற்றுகிறார்.

வாயிலாரைப் போல் நாமும் நம் உள்ளத்தைக் கோயிலாக்கி, அதில் ஆண்டவனை எழுந்தருளச் செய்து ஞான ஒளி வீசும் விளக்கை ஏற்றி, அழியாத ஆனந்தமாகிய நீரால் திருமஞ்சனமாட்டி, அன்பாகிய அமுதைப் படைத்து அர்ச்சனை செய்யும் நிறைவழிபாட்டை நாள்தோறும் தவறாமல் செய்து இறையருள் பெற்றுய்ய முயல்வோமாக!

(தொடரும்)

# அருளாலய மும்பை

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி)

*அருந்தமிழின் மொழிக்கான சிறப்பைத் தானும்*
*அகிலஉல கெங்குமுளத் தமிழ ரெல்லாம்*
*விருந்தமுதாய்க் கொண்டாட வேண்டி, ஈழ*
*வித்தகராம் தனிநாயக அடிகள் தாமும்*
*பெருந்தன்மை யோடன்று தமிழுக் கான*
*பெரும்புகழ்சேர் உலகத்தமிழ் மாநாடென்ற*
*திருந்துபுகழ் அமைப்பொன்றைத் தோற்று வித்தார்*
*திகழ்பெரிய மரமாக வளர்ந்த தின்றே!*

*ஈராண்டிற் கொருமுறையாய் அம்மா நாடு,*
*ஈர்ங்கடல்சூழ் வையகத்தில் ஒவ்வோர் நாட்டின்*
*ஏரார்ந்த பெருநகரில் அறிஞர் கூடி*
*ஏற்றமிகு நற்றமிழை ஆய்தல் என்ற*
*சீரார்ந்த முடிவோடு முதல்மா நாட்டைச்*
*சீர்பெரிய கோலாலம் பூரில் தானும்*
*தேரார்ந்த தொடக்கமாய்த் தொடங்கி வைக்கத்*
*தேர்ந்தபுகழ் தமிழ்த்தாயும் பெற்றா ளம்மா!*

*உலகத்தமிழ் மாநாட்டின் சின்ன மாக*
*உலகறிந்த வாசகமாம் யாதும் ஊரே*
*இலகுபுகழ் யாவருமே கேளிர் என்ற*
*இருந்தமிழ்ப்பூங் குன்றனவர் சொன்ன சொல்லை*
*அலகில்புகழ் தொடராக ஆக்கிக் கொண்டு,*
*அறிவார்ந்த மலேயாவில் நடந்த பின்னர்*
*நிலவுலகப் புகழ்கொண்ட அம்மா நாடு*
*நின்றபுகழ் தமிழ்நாட்டில் நடந்த தம்மா!*

பேரறிஞர் அண்ணாமுதல் அமைச்ச ராகப்
பொறுப்பேற்ற உடனேயே சென்னை தன்னில்
பேருலகம் போற்றஇரண் டாம்மா நாட்டைப்
பெருமையுடன் நடத்தியதை மறப்பா ருண்டோ?
பேரலைகள் வீசுகிற கடலோ ரத்துப்
பெருஞ்சாலை புகழ்பெறவே தமிழால் வாழ்ந்த
பேரறிஞர் சிலைகளெலாம் வைக்கப் பெற்றுப்
பெரியதமிழ்க் கண்காட்சி நடந்த தம்மா!

அடுத்திட்ட மாநாடாம் மூன்றும் நான்கும்
அயல்நாட்டில் நடந்ததுமே அடுத்து வந்த
மடுத்திட்ட ஐந்தான மாநாட் டைத்தான்
மன்னுபுகழ் தமிழ்நாட்டில் நடத்த வேண்டி
எடுத்திட்ட முடிபாக எம்.ஜி. ஆர்தான்
எழிலான முதல்வரென ஆண்ட போது
தொடுத்திட்ட மதுரையிலே நடந்த பின்னர்
தொடர்ந்தனவே ஆறேழும் அயல்நாட் டில்தான்!

எட்டாவ தானதமிழ் மாநாட் டைத்தான்
எல்லோரும் போற்றுகிற தஞ்சை தன்னில்
எட்டாப்புகழ் தமிழ்நாட்டின் முதல்வ ராக
இருந்திட்ட ஜெயலலிதா அம்மை யார்தான்
முட்டாச்சிறப் போடதனை நடத்திக் காட்ட,
முறையாக அடுத்தடுத்த மாநா டெல்லாம்
தட்டாத படியாக வெளிநாட் டில்தான்
தடையின்றி நடந்துவர லாச்சு தம்மா!

தமிழறிந்த தமிழன்தான் தமிழ்நா டாளும்
தமிழ்க்கனவைத் தோற்றுவித்த பாவேந் தர்தம்
தமிழ்க்கவிதை பலித்திட்ட வாறாய் நாளும்
தமிழ்நெஞ்சம் கொண்டிட்ட கலைஞர் தானும்
தமிழ்நாட்டின் முதலமைச்சாய் ஐந்தாம் முறையாய்த்
தமிழ்நாட்டை ஆளுகிற வேளை தன்னில்
தமிழ்நாட்டில் கொண்டாட விலையே? என்று
தனியாக நினைத்தபடித் தூங்கி விட்டேன்!

செம்மொழியாம் தகுதியினைத் தமிழுக் காகச்
செய்தளித்த முதலமைச்சர் என்ற பேரால்
செம்மொழியாம் தமிழுக்கு மாநா டொன்றைச்
செகம்புகழச் செய்வதற்குக் கலைஞ ருக்கே
செம்மாந்த தகுதியுண்டு என்ப தோடு
செம்மலான பேரறிஞர் அண்ணா வுக்கு
செம்பியனாய் ஆட்சிசெய்யும் காலத் தில்தான்
செவ்வியநல் நூற்றாண்டும் வந்த தன்றே!

ஆதலினால் இன்னுமுள ஈராண் டாட்சி
அருமையுடன் இருக்கையிலே கலைஞர் தானும்
சீதனமாய்த் தமிழுக்கு மாநா டொன்றைச்
சிறப்பாகச் செய்திட்டார் என்ற பேச்சு
காதளவில் தேனாகப் பாய்த லோடு
கரும்பினிப்பாய் காசினியோர் காது கட்கும்
நாதமணி ஒலியாகக் கேட்க என்றே
நலம்பொலிய தூக்கத்தில் புலம்பி னேனே!

தூக்கத்தில்என் புலம்பல் கேட்ட வாறாய்
தூவெண்ணீ றணிந்திட்ட நெற்றி யோடே
ஊக்கங்கொள் உள்ளமொடு, ஒருவர் வந்து,
ஊமையென உமக்குள்ளே சொல்லிக் கொண்ட
ஏக்கந்தான் ஈடேறும்! தமிழ்ப்புத் தாண்டாய்
ஏற்றமுடன் தைத்திங்கள் தன்னைக் கொள்ளும்
*ஒக்கத்தைத் தந்திட்ட ஒப்பம் போல
ஓராண்டில் அறிவிப்பும் வரலா மன்றோ?

என்றபதில் எனைஎழுப்பி விட்ட தாலே
எழிலார்ந்த பொங்கலோநற் பொங்கல் என்று
நின்றிட்டோர் வாழ்த்தொலிக்க அருளா லயத்தின்
நின்றபுகழ்கொள் முற்றத்தில் நின்ற நானும்
இன்றிங்கே கலைஞரது ஆட்சி தன்னில்
இருந்தமிழின் மாநாடு அருளா லயத்தின்
மன்றுபுகழ் மாநாடாய் மலர வேண்டி
மண்டியிட்டுச் சூளுரைத்தேன் அருளா லயத்தே!

1. ஒக்கத்தை – உணர்ச்சியை

# குன்றக்குடி அடிகளார்
# பெரியவர் - இளையவர்
# இருவரிடமும் பெற்ற வாழ்த்துகள்!

**(மாமணி)**

- பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஒருநாள் சென்னை வானொலி நிலையத்திலிருந்து ஒரு குரல்; "நான் முருகன், துணை இயக்குநர் பேசுகிறேன். நாளை காலையில் வானொலியில் குன்றக்குடி அடிகளார் கருத்துரை வழங்க வருகிறார்! அவரிடம் நீங்களும், கவிஞர் கலி. பூங்குன்றனும் கேள்விகள் கேட்க வேண்டும்! வர இயலுமா..." - "வருகிறேன்" - என்றேன்.

- மறுநாள் காலை பத்து மணிக்கு வானொலி நிலையத்திற்குச் சென்றேன். வரவேற்றார் முருகன் (சேயோன்).

- சிறிது நேரத்தில் கருஞ்சட்டையணிந்து கவிஞர் கலி.பூங்குன்றன் வந்தார். இருவரும் ஏற்கனவே அறிமுகமானவர்களாதலால் வணக்கம் தெரிவித்துக் கொண்டோம்!

- "மாமணி, அடிகளார் சமயக் கருத்தைச் சொல்லும்போது அவரை நாம் மடக்க வேண்டும்" என்றார், கவிஞர். நான் புன்னகையோடு தலையசைத்தேன்!

- நாங்கள் முருகனோடு ஒலிப்பதிவு அறையில் உரையாடிக் கொண்டிருந்தபோது அடிகளார் வந்தார். அவரை வணங்கி வரவேற்றோம்!

- அந்த ஞானத் துறவியும் கைகுவித்து புன்னகையோடு "நலமா?" என்றார். நாங்களும் புன்னகையோடு "நலமே" என்றோம்.

- முருகன், அடிகளாரிடம் சொன்னார் : "சமயத்தின் அவசியம் பற்றி நீங்கள் பேச வேண்டும். உங்களிடம் இவர்கள் கேள்வி கேட்பார்கள்" அவர் சொன்னதைக் கேட்டு அடிகளார் புன்னகை பூத்தார்!

- ஒலி பெருக்கியை அடிகளார் முன் வைத்துவிட்டு "நீங்கள் பேசலாம்,

சாமி! என்றார் - முருகன் அடிகளார் என்ன சொல்லப் போகிறார் என்று நாங்கள் இருவரும் உன்னிப்பாகக் கவனித்தோம்!

- "உலகத்தில் இதுவரை தோன்றிய சமயங்களெல்லாம் மனிதனின் தோலைத்தான் தொட்டுப் பார்த்திருக்கின்றனவே தவிர, அவனுடைய ஆன்மாவைத் தொடவேயில்லை!" என்றார்.

- கவிஞரும் நானும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டோம். "அட, நாம் கேட்கவேண்டிய கேள்விக்கு அடிகளார் முதலிலேயே பதில் சொல்லிவிட்டாரே!" என வியந்தோம். முதல் சுற்றிலேயே நாங்கள் வீழ்ந்து விட்டதாக நான் உணர்ந்தேன். அதன் பிறகு, அடிகளார் பேசிக்கொண்டே இருந்தார். நாங்கள் ஏதோ ஒப்புக்குக் கேள்விகளைக் கேட்டோம்.

- அடிகளாரை முதன் முதலாக அன்று தான் நேரில் பார்த்தேன். அவருடைய உரையைக் கேட்டேன். விருப்பு - வெறுப்பு இல்லாமல் கருத்துகளை எடைபோடும் திறமையை எண்ணி வியந்தேன்!

**இரண்டாவது சந்திப்பு :**

- முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்களின் 95ஆம் பிறந்தநாள் விழா - 1994 ஆம் ஆண்டு மயிலாப்பூர் ஏ.வி.எம். இராஜேஸ்வரி மண்டபத்தில் நடைபெற்றது.

- விழாவில், மேனாள் குடியரசுத் தலைவர் ஆர்.வெங்கட்ராமனும் செட்டிநாட்டரசர் எம்.ஏ.எம். இராமசாமியும் கலந்து கொண்டனர்.

- அந்த விழாக் குழுவில் நானும் இருந்தேன். விழா முடிவில், குடியரசுத் தலைவர் விழாக்குழுவினர் அனைவருக்கும் பொன்னாடை அணிவித்துச் சிறப்பித்தார்!

- அடுத்த ஆண்டு கி.ஆ.பெ.வி.யின் 96ஆவது பிறந்தநாளைக் கொண்டாட வேண்டுமென்று மரு.மு.குமரேசன் விரும்பினார். கி.ஆ.பெ.வி. அய்ந்து ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் தம் பிறந்தநாளைக் கொண்டாடுவது வழக்கம் என்று சொல்லியும் அளவற்ற அன்பு மிகுதியால் அய்யாவிடமே அனுமதி பெற்றுவிட்டார்.

- விழாத் தலைவராக, குன்றக்குடி அடிகளாரை அழைப்பதென முடிவு செய்யப்பட்டது. அடிகளார் அப்போது மயிலாப்பூர் உட்லண்ட்ஸ் உணவகத்தில் தங்கியிருந்தார். அவரைச் சந்திக்க, மரு.குமரேசன், கண்ணன் - மணிமேகலை, பேரா.சரளா - இராசகோபாலன், திருக்குறள் வீ.செ. கந்தசாமி "முகம்" மாமணி, முனைவர் இளமாறன் மற்றும் சிலரோடு சென்றோம்.

- அடிகளாரின் உதவியாளர் எங்களை வரவேற்று உட்காரச் சொன்னார்! நாங்கள் உட்கார்ந்த சிறிது நேரத்தில் அடிகளார் குளித்த தலையைத் துடைத்துக் கொண்டே வந்தார்! நாங்கள் எழுந்து வணங்கினோம். அவர் அமர்ந்த பின்பும் நாங்கள் நின்றுகொண்டே இருந்தோம்!

- பலரும் அடிகளாரின் காலைத் தொட்டு வணங்கினர். நான் சுவரோரமாக நின்றுகொண்டே அவரை வணங்கினேன்! அடிகளார் என்னைப் பார்த்து "ஓ...! நீங்கள், அவங்களா....?" என்றார். நான் சிரித்தேன். எல்லோருக்கும் திருநீறு கொடுத்தார், பூசிக்கொண்டனர். எனக்கு, கமலாப்பழம் ஒன்றைக் கொடுத்தார். இரு கையேந்தி பெற்றுக்கொண்டு வணங்கினேன்.

- "சரி, நீங்களெல்லாம் வந்த நோக்கத்தைச் சொல்லுங்கள்" மரு.மு. குமரேசன், "சாமி, நம்ம அய்யா கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்களின் 96ஆம் பிறந்தநாள் விழாவைக் கொண்டாடப் போகிறோம். நீங்கள் வரவேண்டும்" என்றார். அவர் சொன்ன தேதியில் வேறு நிகழ்ச்சி எதுவும் இல்லாததால் அடிகளார் நிகழ்ச்சியில் கலந்துகொள்ள இசைவளித்தார்.

- அனைவரும் புறப்பட ஆயத்தமானபோது அடிகளாரின் சென்னைத் திருக்குறள் பேரவைச் செயலாளர் வீ.செ.கந்தசாமி அவர்கள் "சாமி! உங்கள் காலத்திலேயே மத்திய அரசு, திருக்குறளைத் தேசிய நூலாக்க ஆவன செய்யுங்கள்!" என்றார்.

- "என்ன அய்யா சொல்றீங்க... நம்ம ஊர் தமிழ் எம்.பி.க்கள் பலருக்குத் திருக்குறளைப் பற்றி எதுவுமே தெரியாதே! அங்கே நாடாளுமன்றத்திலே இருக்கிற அய்ந்நூறு பேருக்கும் நம் திருக்குறளைப் பற்றிச் சொன்னோமா?

திருக்குறள், யானையா? குதிரையா? என்பானே! முதலில் அவரவர் மொழிகளில் திருக்குறளைப்பற்றி அச்சிட்டுப் பரப்பணும். அதன் பிறகு நம்ம தமிழ் எம்.பி.க்கள் அவர்களை வசியப்படுத்தணும்! அதன் பிறகு நம்ம ஆளு எவராவது திருக்குறளைத் தேசிய நூலாக்க வேண்டுமென்று குரல் கொடுத்தால் அவங்க கை தூக்குவாங்க. இதையெல்லாம் நாம் முதல்லே செய்யணும்..." என்றார். அடிகளாரின் அறிவுபூர்வமான, ஆக்கப்பூர்வமான அறிவுரையைக் கேட்டு அனைவரும் அமைதியானோம்.

✦ அடுத்ததாக வீ.செ.க. என்னை, அடிகளார் முன் நிறுத்தி, "சாமி! இவர் "முகம்" என்னும் இதழின் ஆசிரியர். மிக நல்ல இதழ். அதற்கு நான் ஆண்டு உறுப்பினராகணும் உங்கள் கையால் இதைக் கொடுங்கள்" என்று நூறு ரூபாய்த் தாளை அடிகளாரிடம் கொடுக்க, அடிகளார் அதை அடியேனிடம் கொடுத்தார். நான் இரு கையேந்தி, வணங்கிப் பெற்றுக் கொண்டேன்.

✦ கி.ஆ.பெ.வி.யின் 96ஆம் பிறந்தநாள் விழா அண்ணா சாலையிலிருந்த ஓட்டல் சிறீலேகாவில் நடந்தது. விழாவில் அடிகளார், ஆர்.எம்.வீ. இந்தியன் வங்கித் தலைவர் கோபாலகிருஷ்ணன் மற்றும் பலர் அய்யாவை வாழ்த்திப் பேசினர். அய்யா கலந்துகொண்ட கடைசி நிகழ்ச்சி அதுதான். நிகழ்ச்சி முடிந்ததும் நேராக இரமணா மருத்துவமனையில் சேர்ந்தார். அந்த மருத்துவமனையில்தான் அவருடைய இன்னுயிர் பிரிந்தது!

✦ தவத்திரு குன்றக்குடி அடிகளாரை நான் கடைசியாகச் சந்தித்ததும் அந்த விழாவில்தான் அதன்பிறகு சில காலத்திற்குள் அடிகளார் புகழ்நிலை எய்திவிட்டார்!

**இளையவர் பொன்னம்பல அடிகளார்**

✦ பெரியவர் மறைந்த பிறகு அவர் இல்லாத குறையை நிறைவு செய்ய வந்தார் இளையவர், பொன்னம்பல அடிகளார்! தமிழும் தமிழரும் செய்த நற்பயனால் மூத்தவரை நூற்றுக்கு நூறு எல்லா வகைகளிலும் ஒத்திருக்கிறார்!

✦ பத்து ஆண்டுகளுக்கு முன் ஒரு நாள் மயிலாப்பூர் கற்பகாம்பாள் உணவகத்தில் தங்கியிருந்த இளையவர் பொன்னம்பல

அடிகளாரைச் சந்திக்க சான்றோர் பேரவையின் சார்பில் அதன் நிறுவனர் நா.அருணாசலம், அரு.கோபாலன், மாமணி, கவிஞர் ஜெயபாஸ்கரன் ஆகியோர் சென்றோம்!

✧ எங்களுக்கு முன்பே அடிகளாரைச் சந்திக்க முனைவர் க.ப. அறவாணன் வெளியே காத்திருந்தார். சான்றோர் பேரவை அறிமுக அட்டையை அடிகளாரின் உதவியாளரிடம் கொடுத்தனுப்பினார். ஆனா ளுனா.

✧ உடனே உள்ளே வரச்சொல்லி உதவியாளர் வந்து சொன்னார். நாங்கள் உள்ளே சென்றபோது "தினமணி" ஆசிரியராக இருந்த திரு. சம்பந்தமும் அவர் துணைவியாரும் அடிகளாரிடம் உரையாடிக் கொண்டிருந்தனர்.

✧ உள்ளே சென்று அடிகளாரை வணங்கினோம். அவர் எங்களுக்குத் திருநீறுக்குப் பதில் ஆளுக்கொரு கமலாப் பழத்தைக் கொடுத்தார்.

✧ தமிழ்ச் சான்றோர் பேரவை நடத்தும் தமிழ் இயக்கம் பற்றி அடிகளார் கேட்டறிந்து தம் ஆதரவைத் தெரிவித்தார்; தமிழியக்கம் வெற்றி பெற வாழ்த்தினார்.

**மாமணியின் 70ஆம் பிறந்தநாள் (6.1.2001)**

✧ விழாவைக் கொண்டாட குழு ஒன்று அமைக்கப்பட்டது. பொன்னம்பல அடிகளார், தமிழக அமைச்சர் தமிழ்க்குடிமகன், மத்திய அரசின் உதவி நிதியமைச்சர் செஞ்சி இராமச்சந்திரன் ஆகியோரை அழைக்க குழுவினர் முடிவு செய்தனர்.

✧ அடிகளாரை அழைக்கும் பொறுப்பை பாரதிதாசன் பல்கலைக்கழக மேனாள் துணைவேந்தர் பேராசிரியர் ச.முத்துக்குமரன் அன்புடன் ஏற்றுக் கொண்டார். தமிழ்க்குடிமகனை அழைக்கும் பொறுப்பை கவிஞர் இளமாறனும், செஞ்சியாரை அழைக்கும் பொறுப்பை கடலூர் ம.தி.மு.க. பொறுப்பாளர் வந்தியத்தேவனும் ஏற்றனர்.

✧ 70ஆம் ஆண்டுவிழா, சென்னை எழும்பூர் அருங்காட்சியக அரங்கில், கண்டோரும் கேட்டோரும் வியக்கும் வண்ணம் முனைவர் ச.முத்துக்குமரன் தலைமையில் நடைபெற்றது.

✦ "முகம்" முகப்போவிய நாயகர்கள் 50 பேரும் தமிழ் இலக்கிய அமைப்புகளைச் சேர்ந்த பெருமக்கள் 20 பேரும் விழாவில் பொன்னம்பல அடிகாளர் அவர்களால் நினைவுப்பரிசளித்து, ஆடை போர்த்திப் பாராட்டப்பெற்றனர்.

✦ அடிகளார் பேசும்போது "பொதுவாக, பிறந்தநாள் விழா என்றால், விழா நாயகரைத்தான் பலரும் பாராட்டுவார்கள். ஆனால்... இங்கே, "முகம்" மாமணி தன்னைப் பாராட்டிக் கொள்ள விரும்பினால் தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் தொண்டாற்றுகின்ற 70 பேரைப் பாராட்டுகிறார் என்றால், இவர் ஒரு வித்தியாசமான மனிதர்தான்"

✦ இவர் நடத்தும் "முகம்" இதழையும் நான் தொடர்ந்து படித்து வருகிறேன்.இதில் வரும் எல்லாப் படைப்புகளுமே தரமானவை. குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் "கிந்தனார் பதில்கள்" படிப்பவர்களைச் சிரிக்கவும், சிந்திக்கவும் வைக்கின்றன!

✦ நானும் "முகம்" இதழின் புரவலராகிறேன்! மாமணியும் அவர் துணைவியாரும் வாழ்வாங்கு வாழ திருவருளை வேண்டுகிறேன்!

விழாவில் எனக்கு மாலை, நினைவுப் பரிசுகள் வழங்குவதற்குப் பதில் சந்தாத் தொகையாக "முகம்" வளர்ச்சிக்கு நிதியாக வழங்குமாறு கேட்டுக்கொண்டேன்.

அன்பர்கள் ரூ. 5, 10, 50, 100, 1000 எனக் கொடுத்தனர். அத்தொகை ரூ. இருபத்தைந்தாயிரமாகச் சேர்ந்தது! அத்தொகை "முகம்" அறக்கட்டளையில் சேர்ந்தது.

நன்றி : "முகம்" இதழ் பிப்ரவரி 2009

விதை, செடியாய், மலராய், கனியாய் மாறும்பொழுதான் பலருக்கும் பலன் தருகிறது. விதைத்தது விதையாகவே இருந்துவிட்டால் எப்படி மரம் வரும்? எப்படி மலர் மணம் பரப்பும்? எப்படி அறுசுவைக் காய்கனிகளை நாம் பெறுவது?

சிறிய விதை, பெரிய மரமாய் மாறும் விந்தை எப்படி நிகழ்கின்றது? எனவே, மாற்றம் தேவை; வளர்ச்சிக்கு வித்திடும் செயல் தேவை.

**- பொன்னம்பல அடிகளார்**

# திருக்குறளில் ஊழ்வினைக் கோட்பாடு

(முனைவர். **பொ.நா. கமலா**)

## 0.0 தோற்றுவாய்

திருக்குறளில் ஊழ்வினைக் கோட்பாடு பற்றி ஆராய்ந்து அறிதல் இக்கட்டுரையின் குறிக்கோளாகும்.

**0.1**

திருக்குறளில் "ஊழ்" என்ற சொல்லாட்சியும்,"வினை" என்ற சொல்லாட்சியும் தனித்தனியாகக் காணப்படுகின்றனவேயன்றி "ஊழ்வினை" என்ற சொல்லாட்சி யாண்டும் காணப்பெறவில்லை.

**0.2**

உடலைத் துணைகொண்டு அகக்கருவிகள், புறக்கருவிகள் வாயிலாக உலகத்தோடு தொடர்பு கொள்ளப் பிறப்பெடுத்த உயிர்கள் ஊழுக்கு ஆட்படுவது பற்றியும் ஊழை வெல்லும் வழி பற்றியும், உயிர்கள் இவ்வுலகில் ஆற்ற வேண்டிய நல்வினைகள், தவிர்க்க வேண்டிய தீவினைகள் பற்றியும், அவற்றால் எய்தும், இன்ப துன்பம் பற்றியும் திருவள்ளுவர் குறட்பாக்களில் பரக்கக் கூறியுள்ளார்.

**0.3**

வள்ளுவர் கூறும் "ஊழ்", "வினை" பற்றி ஆராயும் அவர் காலத்துச் சமுதாயத்தில் நிலவிய ஊழ்வினைக் கோட்பாட்டினை - அதாவது கருமக் கோட்பாட்டினைப் (Karma Theory) பற்றிய அறிதல் இன்றியமையாததாகிறது.

## 1.0 ஊழ்வினைக் கோட்பாட்டின் தோற்றம்

### 1.1. வேத மரபில்

பகிர்ந்தளிக்கும் தெய்வமும், இயற்கை ஒழுங்குகளைக் காத்த ஒத்திசைவுத் தெய்வமுமான "ரித"(rta) என்பதை இயற்கைப் பாடல்கள் வழி - வேதப்பாடல்கள் வழி வேதமரபினர் வழிபட்டு வந்தனர்.

இயற்கையை மாந்தர் சுரண்டி வாழத் தொடங்கியபோது பகிர்ந்தளிப்பு குன்றிப் போக, ஒத்திசைவு குலைந்து போக "அன்ரித" (antra) ஆகிவிட்டதே எனப் புலம்பி வருந்தத் தொடங்கினர். இடி, மழை, புயல், வெள்ளம் ஆகிய துன்பங்கள் தேவர்களால் விளைகின்றன என்று எண்ணி அஞ்சி, அவர்களை மகிழ்விக்க வேள்வி செய்யத் தொடங்கினர்.

ஆதியில் எழுந்த பூர்வமீமாம்சை என்ற நூல் கன்மம் செய்ய வேண்டும் என்றது. பின்னர்த் தோன்றிய பிரமாணங்களில் மறுபிறவிக் கோட்பாடு, கருமக் கோட்பாடு பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன. ஜாவாலி - ஸ்வேதகேது உரையாடல் இடம்பெறும் பிரகதாரண்யக உபநிஷத்திலும் (6.2), யாக்ஞவல்யர் உரை இடம் பெறும் சாந்தோக்ய உபநிஷத்திலும் (5.3-10) மறுபிறவி கர்மாவால் தீர்மானிக்கப்படுகிறது என்ற கருத்து காணப்படுகிறது. கௌடில்யரின் அர்த்த சாஸ்திரம் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றோடு வீடு என்பதை இணைத்து உறுதிப்பொருள் நான்கு என்றது.

ஆன்மா அழியாதது; முன்பிறவியில் செய்த நல்வினை, தீவினை பொருத்து அது மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்கும்; அப்பிறவிச் சுழற்சி "சம்சார"(Samsara) சக்கரம் எனப்பட்டது. பிறவிச் சுழற்சியிலிருந்து மீண்டு வீடுபேறு அடைய யாகம் செய்ய வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டது. இக்கருத்தியல்கள் தோற்றமுற்றெழுந்த காலம் கி.மு. ஏழாம் நூற்றாண்டு என்பர்.

சமூகக் குறிக்கோளியலை இயற்கை இகந்த பண்பாடாக மாற்றம் செய்வது மனித சமூக வரலாற்றில் மீண்டும் மீண்டும் நடைபெற்று வந்துள்ளது என்பது மாக்ஸ் ஆட்டோ கருத்து[2]. அவர் கருத்துக்கிணங்க வேத மரபினரின் சமூகக் குறிக்கோளியல் கருத்துகளும் யாகத்தை அடிப்படையாகக் கொண்ட ஒற்றைப் பண்பாடாக - இயற்கை இகந்த (Super Natural) பண்பாடாக மாற்றம் பெற்றமை மேற்கூறியவற்றிலிருந்து தெரிய வருகிறது. அது முதற்கொண்டு இக்கருத்தியல்கள் மக்கள் மனதில் ஆழப் பதிந்து நம்பிக்கைகள் ஆயின.

**1.2. சமண, பௌத்த, ஆசீவக மரபில்**

ஊழ்வினையை ஏற்கும் சமணம், இறைவன் கூட்டுவிப்பான் என்ற கருத்தை மறுக்கும்[3]. உயிர்கள் கருவில் தோன்றிய பின் தத்தம் வினைப் பயனால் இன்பமோ துன்பமோ அடையும் என்னும் பௌத்தம் (மணி. 30 : 95 - 97). மற்கலிகோசரின் ஆசீவக நெறியைப் பின்பற்றிய கணியன் பூங்குன்றனார், "நீர்வழிப் படூஉம் புணைபோல ஆருயிர் முறைவழிப் படூஉம்" (புறம். 192 : 9, 10) என்றார். ஆசீவகர்கள் இயற்கை நியதியில் நம்பிக்கை கொண்டவர்கள்.

**2.0 பழந்தமிழ் நூல்களில் ஊழ்**

சமயங்கள் வழி ஊழ்வினைக் கோட்பாடு அணுகப் பெற்றது. இனி வள்ளுவர் காலத்துக்கு முன்பு விளங்கிய தொல்காப்பியம், சங்க நூல்கள் வழி "ஊழ்" பற்றிக் காணுதல் வேண்டும்.

**2.1 தொல்காப்பியத்தில் ஊழ்**

"பால்வரை தெய்வம்" (சொல் : 57:2) என்பதற்கு சேனாவரையர், "எல்லார்க்குமின்பத் துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது" என்றார். ச.வே.சுப்பிரமணியன் "விதி" என்று பொருள் கொள்வார்.

"ஒன்றே வேறே என்றிரு பால்வரை தெய்வம்" (பொருள் : கள : 2) என்பதற்கு ச. பாலசுந்தரம், "அக ஒழுக்கமாகிய ஐந்திணை நிகழ்ச்சிகள் யாவும் கூடியிருத்தல் - பிரிந்திருத்தல் என்னும் இருவகையாலே நிகழ்தலின் ஒன்றுபடுத்தல் - வேறுபடுத்தல் எனப் பாலும் (ஊழ்வினை) இருவகைத் தாயிற்று" என்பார். "ஒன்றுபடுத்தும் ஊழ்நிலையானும் வேறுபடுத்தும் ஊழ்நிலையானும்" எனப் பொருள் கொள்வார், ச.வே.சுப்பிரமணியன்.

இதிலிருந்து மரபுரைகாரர் "ஊழ்வினை" (கருமவினை) என்று கொள்ள, இயற்கைவாதியாகிய ச.வே. சுப்பிரமணியன், "ஊழ்நிலை" எனப் "பால்வரை தெய்வத்" திற்குப் பொருள் கொண்டது தெரிகிறது.

### 2.2 சங்க இலக்கியத்தில் ஊழ்

சங்க இலக்கியத்தில் ஊழ் இடம்பெற்ற வகையினை இரா.இளங்குமரன் ஆராய்ந்துள்ளார். "முறை" என்ற பொருளில் ஒன்பது இடங்களிலும், "மலர்தல்" என்ற பொருளில் நான்கு இடங்களிலும், "அலர்தல்" என்ற பொருளில் மூன்று இடங்களிலும், "முதிர்தல்" என்ற பொருளில் நான்கு இடங்களிலும், "முற்றல்" என்ற பொருளில் ஓர் இடத்திலும் இடம்பெறுவதாகக் கூறியுள்ளார்[4]. சங்க இலக்கியத்தில் "ஊழ்" என்பது "ஊழ்வினை" என்ற பொருளில் கையாளப்படவேயில்லை.

புறநானூற்றுப் பாடலொன்றில் வேளிர்குலத் தலைவன் ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியுள்ளார்.

"இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆய்அலன்" (புறம்.134)

எனக்கூறும் கருத்து சிந்தித்தற்குரியது. இம்மையில் அறவினை செய்தால் மறுமைக்கு ஆகும் என்ற கருத்து இவண் கேள்விக்குள்ளாக்கப்படுகிறது. அறவினையைப் பரத்தோடு தொடர்புபடுத்துவதை வெறுப்பவர் மோசியார் என்பது புலனாகிறது.

### 3.0 திருக்குறள் - மாற்றுமரபு

திருக்குறளில் வேள்வி மறுப்பு (259), தீர்த்தமாடினால் தீவினை தீரும் என்ற நம்பிக்கை மறுப்பு (278), (நீராடல் என்பது தமிழர் மரபு; தீவினை தீரும் என்பது வேதமரபு) சாதீயப் படிநிலை மறுப்பு (972), காட்சியளவையை ஊழ்வினைக்குச் சான்றாக ஏற்றுக் கொள்ளுவது மறுப்பு (அறத்தாறிது...., அவ்விய நெஞ்சத்தான்....) என வேதமரபிற்கு எதிரான குரல்களை இனங் காண இயலுகிறது.

வேதநெறி இலக்கிய மரபுக்கு எதிர்நிலையில் தமிழர்க்கு ஒரு மறை வேண்டும் என்ற சூழலில் திருக்குறள் தோன்றியது என்பதற்கு வண்ணக்கஞ் சாத்தனாரது திருவள்ளுவமாலைப் பாடலும் (43 : 2 -4), சிலம்பு நா. செல்வராசுவின் கூற்றும்[5] அரண் சேர்க்கின்றன.

### 4.0 வள்ளுவர் கூறும் "ஊழு"ம் "வினை"யும்

பிறப்பினை எய்திய உயிர்கள் "ஆகு ஊழு"க்கும், "போகு ஊழு"க்கும் ஆட்படுதல் இயற்கை நியதி. இதனையே வள்ளுவர் ஊழ்"

என்ற அதிகாரத்தில் அமைந்த பத்துக் குறட்பாக்களின் மூலம் விளக்கியுள்ளார். சகடக்கால் போலச் செல்வம் வந்து சேருதலும். அழிதலும் இயற்கை நியதி என்பதை ஆறு குறட்பாக்களிலும் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருதலும் இயற்கை நியதி என்பதை மூன்று குறட்பாக்களிலும், ஊழ் மிக வலியது என்பதை இறுதிக் குறட்பாவிலும் கூறியுள்ளார். அக்கால மக்களின் ஆழ்மனத்தில் இருந்த நம்பிக்கையை வள்ளுவர் பதிவு செய்துள்ளார் என்பது பொருந்தும்.

இரா. இளங்குமரன் "ஆகூழை" "ஆக்க இயற்கை" என்றும்[6],ச.வே. சுப்பிரமணியன் "நல்ல இயற்கைச் சூழல்" என்றும்[7] கொள்ளுகின்றனர். "ஊழ்" என்பது "இயற்கை" என்பதும், "வினை" என்பது "செயற்கை" என்பதும் சொ. நாராயணசாமி கூற்றாகும்.

– தொடரும்

**தூத்துக்குடியில் திருக்குறள் முற்றோதுதல் நடைபெற்றது**

தூத்துக்குடியிலுள்ள திருக்குறள் அமைப்புகளின் சார்பில் மாதாங் கோயில் அருள்மிகு அங்காள பரமேசுவரி அம்பாள் திருக்கோயிலில் திருக்குறள் முற்றோதுதல் நடைபெற்றது. நாள் (11.01.2009, 28.12.08)

திருக்குறள் அமைப்புகளின் நிருவாகி "திருக்குறள் தூதர்" மோ.அன்பழகன் தலைமைவகித்து உலகப்பொதுமறையாம் "திருக்குறள் காட்டும் வாழ்வியல் நெறி" எனும் தலைப்பில் உரையாற்றினார்.

"திருக்குறள் பணிச்செம்மல்" அரு.அ.சீ.தனபாலன், கு.சீனிவாசசித்தர், முன்னிலையில் நடைபெற்றது. "சிவபக்த சிரோண்மணி" மா. அங்கப்பன் வரவேற்றுப் பேசினார்.

சி.வ. நகராட்சி தொடக்கப்பள்ளித் தலைமையாசிரியர் க. பகவதி திருக்குறள் முற்றோதுதல் நடத்தினார். அ. இராமகிருட்டிணன் மற்றும் பள்ளி மாணவ, மாணவியர் கலந்து கொண்டனர்.

– **மா. அன்பழகன்**, மாவட்டச் செயலாளர்.

# மணந்தனர் வாழ்க!

திருமழபாடித் தமிழ்ச்சங்கத் தலைவர் முனைவர். அ. ஆறுமுகம் - சாரதாம்பாள் இளைய மகன் பொறிஞர். ஆ.எழிலரசன், பெரம்பலூர் தோட்டக்கலை உதவி இயக்குநர் இரா.நலங்கிள்ளி – தேன்மொழி முதல்மகள் பொறிஞர். ந. சாணக்கியா ஆகியோர் மணவிழா அரியலூர் கீதா திருமண மண்டபத்தில் திருவள்ளுவராண்டு 2040, தைத்திங்கள் 12-ஆம் நாள் (25.1.2009) முதுமுனைவர், இலக்கியச்செம்மல் இரா. இளங்குமரனார் அவர்கள் தலைமையில், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறை இணைப் பேராசிரியர் முனைவர் அரங்க. பாரி அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது.

தஞ்சை மருத்துவக் கல்லூரி மூளை நரம்பியல் அறுவை சிகிச்சைத் துறைப் பேராசிரியர் ஆ. திருவள்ளுவன் அனைவரையும் வரவேற்றார். தலைவர் மணவிழாவை நடத்தி வைத்து அரங்கினர் அனைவரிடமும் மணமக்களை வாழ்த்து பெறச் செய்து சிறப்புரை ஆற்றினார். முன்னிலை வகித்த பேராசிரியர், தருமபுரித் தமிழ்ச்சங்கச் செயலர் மருத்துவர் கி. கூத்தரசன், மருத்துவ மதிப்பியல் பேராசிரியர் மருத்துவர் சு. நரேந்திரன் மற்றும் பலர் வாழ்த்துரை வழங்கினர். முதுகலை வேதியியல் ஆசிரியை ஆ. அல்லி நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். நலங்கிள்ளி தேன்மொழி அனைவருக்கும் நன்றி நவின்றார்.

பெருமளவில் நண்பர்களும், உறவினர்களும், மருத்துவர்களும், பேராசிரியர்களும் கலந்து கொண்டனர். அனைவர்க்கும் தமிழ்ப் புத்தாண்டு நாள்காட்டியும், திருக்குறள் தொடர்பான நூல்களும் அன்பளிப்பாக வழங்கப்பெற்றன.

மணமக்கள் திருவள்ளுவர் தவச்சாலை அறக்கட்டளை நிதியாக உருபா இருபதாயிரத்தை, தவச்சாலை நிறுவனர் இளங்குமரனார் அவர்களிடம் வழங்கினர்.

நண்பகல் விருந்துடன் மண விழா நிறைவு பெற்றது. முன்னம் தொண்டு நிறுவன மகளிர், செல்வி. சோ. ஜெயந்தி வழிகாட்டுதலில் மணவிழாவுக்கான பணிகளை நிறைவேற்ற மிகவும் உதவினர்.




**வள்ளல் பழ.தரும. ஆறுமுகம் வாழ்க!**

பாடாத முல்லைக்கு மணித்தேர் ஈந்தான்;
பண்டொருநாள் வேள்பாரி! அவன்போல் இன்று
நாடாத என்றனுக்கும் ஓரி லக்கம்
நலநிதியாய் ஆறுமுக நம்பி தந்தான்!
ஈடாகும் இவனுக்கு மாரி யென்கோ?
இல்லை,அந்தப் பாரியென்கோ? என்சொல் கேனோ?
வாடாமல் நான்வாழ மனங்கொண் டான்காண்
வள்ளல்பழ தருமஆறு முகனார் வாழ்க!

- **மரு. பரமகுரு**

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# சேக்கிழார் உணர்த்திய செந்தமிழ் நெறி

(புலவர். ம. இளங்கீரன்)

**அப்பூதி அடிகள்**

அன்று, திங்களூர் எங்கும் திருநாவுக்கரசரின் திருப்பெயர் - தமிழ்ப்பெயரே காணப்பட்டது. இன்று தமிழ்ப்பெயர் சூட்ட, பெயர்ப் பலகை வைக்க, தமிழில் கையெழுத்திட வேண்டிக் கோரிக்கைகளும், அரசாணைகளும் தேவைப்படுகின்றன. ஆனால் அமைச்சர் சேக்கிழார் அப்பூதி அடிகள் வரலாற்றால் மொழி வளர்ச்சிக்கு வழிகாட்டும் பாங்கு போற்றத்தக்கதாகும்.

தமிழர் பண்பாட்டின் விருந்தோம்பல் மாட்சி, இளைஞர் தம் கடமை உணர்வு ஆகிய கூறுகளை அப்பூதி அடிகள் வரலாறு இனிதே காட்டுகின்றது. தண்ணீர்ப் பந்தல் அமைத்தல், நந்தவனம் அமைத்தல், குளம் அமைத்தல், நிழல் தரும் மரங்கள் வளர்த்தல், பசித்தவர்க்கும் அடியார்க்கும் பாங்கறிந்து உணவிடல் என்ற சிறந்த அறச்செயல்கள் அன்று ஓங்கியிருந்தமையை அப்பூதி அடிகள் புராணம் அழகுறக் காட்டுகிறது. உயிர் நீத்தாரையும் உயிர்ப்பிக்கும் தெய்வீக ஆற்றல் வாய்ந்தவை திருமுறைப் பாடல்கள் என்பதை இப்புராணம் வெளிப்படுத்துகின்றது. அந்தணர் ஒருவர் வேளாளரைக் குருவாகக் கொண்டொழுகிய ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தை அல்லவா சேக்கிழார் காட்டுகிறார்? தன் மகனின் இழப்பையும் விருந்தினர் முன் வெளிப்படுத்தாது "அன்பர் அமுது செய்து அருளுதற்குச் சிறிது இடையூறு செய்தான் இவன் எனச் சிந்தை நொந்தார்" (அப்பூதி.புராணம் 37) என்று குறிப்பிடுவதிலிருந்து உயிரினும் மேலானதாக விருந்தோம்பும் பண்பு போற்றப்பட்ட சிறப்பினை அறிகிறோம்.

**திருநாளைப் போவார் :**

தீண்டாமை என்னும் படிற்றொழுக்கம் நிலஉரிமைச் சமுதாயத்தில் கொத்தடிமை நிலையை உருவாக்கி உள்ளது.

இத்தகைய அடிமைச் சமுதாயத்தில் உழைப்பாளர்கள் ஒதுக்கி வைக்கப்பட்டனர்; ஒடுக்கி வைக்கப்பட்டனர்; உரிமைகள் மறுக்கப்பட்டன. தாழ்த்தப்பட்டோர்க்குத் திருக்கோயில் வழிபாட்டுரிமை மறுக்கப்பட்ட நிலையினைத் திருநாளைப் போவார் புராணத்தால் அறிகிறோம். பண்ணை அடிமைச் சமுதாயத்தில் பக்தி செலுத்த, பரமனை வழிபட அனுமதிக்காத நிலையை மாற்ற நந்தியை நகர்த்துகிறார் இறைவன். நந்தனாரை அந்தணராக்கிக் காட்டுகிறார் சேக்கிழார். நந்தனார் மேற்கொண்ட புரட்சி ஓர் அமைதிப் புரட்சி ஆகும். இதனை ஏற்றுச் சேக்கிழார் எழுப்பிய முதல் முழக்கமே திருநாளைப் போவார் புராணம்.

"ஐயரே! அம்பலவர் அருளால் இப்பொழுது அணைந்தோம்" (திருநாளைப் போவார் புராணம் -30) என்ற நந்தனாரின் கூற்று அந்தணர்தம் ஆவணத் தீயை அணைக்கச் செய்தது. திருநாளைப் போவாரை அந்தணரும் மற்றவரும் வணங்கி வழிபட வைக்கிறார் சேக்கிழார்.

**சுந்தரர் :**

திருவாரூரில் சுந்தரரின் திருமணத்தில் அவரைத் தடுத்து ஆட்கொண்டான் இறைவன்.

> "மற்றுநீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம்
> பெற்றனை, நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
> "அர்ச்சனை பாட்டே ஆகும்", ஆதலால் மண்மேல் நம்மைச்
> சொற்றமிழ் பாடுகஎன்றார் தூமறை பாடும் வாயார்"
> (தடுத்தாட்கொண்ட புராணம்)

என அந்தணர் வடிவில் வந்து தடுத்தாட் கொண்டார். "தோழராக நம்மை உமக்குத் தந்தோம்" என்ற ஆண்டவன் வாக்கு திருமுறைத் தமிழுக்குச் சேக்கிழார் தந்த மணிமகுடமாகும்.

இறைவனால் சுந்தரருக்குச் செய்து வைக்கப்பெற்ற திருமணங்கள் கலப்புத் திருமணங்கள் ஆகும். குலத்தில் ஓர் ஆதி சைவராகவும் வளர்ப்பில் மன்னன் மகனாகவும் இருந்த சுந்தரர்

உருத்திர கணிகையர் குலத்தில் தோன்றிய பரவையாரைத் திருமணம் செய்தார். பின்னர் வேளாளர் குலத்தில் பிறந்த சங்கிலியாரை இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். இந்தக் கலப்புத் திருமணங்களுக்கு இன்றையச் சமுதாயத்தில் வழி அமைத்துக் கொடுத்த முன்னோடியாகத் திகழ்பவர் சேக்கிழார் ஆவார்.

**கண்ணப்பர்**

பிறப்பினால் உயர் சாதியினர் எனக் கருதிய "சிவகோசரியார்" போன்ற உயர்ந்த குலத்தோரும் மனம் மாறிச் சமத்துவ நெறி தழைக்க வேண்டும் என்ற கொள்கையை வலியுறுத்தவே கண்ணப்ப நாயனார் புராணம் பாடப்பட்டதாகத் தோன்றுகிறது. சிவகோசரியாராகிய ஆதிசைவர் வழக்கம்போல ஐந்து நாள்கள் பொன் முகலி ஆற்றுப் புனித நீர், நறுமணமிக்க சோலை மலர்கள், பொங்கி வந்த நைவேத்திய உணவு கொண்டு பூசனைச் சடங்கு நிகழ்த்துகிறார். ஆனால் கண்ணப்பரின் தாய்மை அன்புத் திறமாகிய உண்மைப் பக்தியை உணர்த்துவான் வேண்டி இறைவன் கண்ணில் செந்நீர் ஒழுக்கிக் காட்டுகின்றார். அந்தக் காளத்தி வேடனாகிய திண்ணனின் வாயில் கொணர்ந்த பொன் முகலி ஆற்று நீர் குளிப்பாட்டுகிறது. தலையில் கொண்டு வந்த மலர்கள் கொட்டப்படுகின்றன. சுட்டெடுத்து வாயினால் தின்று சுவை பார்த்த பன்றிக் கறி படைக்கப்படுகிறது. செருப்புக் கால் முகத்தைத் தீண்டுகிறது. இவைகளெல்லாம் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

வேடன் உமிழ்ந்த நீர் கங்கையினும் புனிதமாகிறது. முடியிலிருந்து சிந்திய மலர்கள் முனிவரும் தேவரும் மலரிட்டு வழிபடுவதற்கு மேலாயின. அவன் படைத்த உணவு அந்தணர் வேள்வியின் அவிப்பாகத்தினும் ஒப்புயர்வற்றதாகிறது. அவன் கால்கள் மேனியில் பட்டது குழந்தை முருகனின் சேவடியினும் இன்பச் சிலிர்ப்பை இறைவனுக்கு உண்டாக்கிற்று எனில் கண்ணப்பரின் பக்தி - அன்பின் திறம் மிக மேலானதாகும். எனவேதான் திருவாசகத்தில் மாணிக்கவாசகர்,

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னொப்பில் என்னப்பன் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித் தென்னை "வா" என்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி"

என்று பாடுகிறார்.

"நாளாறில் கண்ணிடந்து அப்ப வல்லேன் அல்லேன் நான் இனிச்சென்று
ஆளாவது எப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே"

என்று பட்டினத்தார் பாடுவதும் வேடர் கண்ணப்பரின் சீரிய செந்தமிழ் வழிபாட்டு நெறியை உணர்த்துவனவாம்.

**சதியா? விதியா? கெடுமதியா?**

சேக்கிழாரால் புறந்தள்ளப்பட்ட தீண்டாமைக் கொடுமை, சாதி வேறுபாடுகள் மற்றும் ஏற்றத் தாழ்வுகள் அவர் காலத்துக்குப் பின் தமிழகத்தில் எவ்வாறு மேலோங்கின? வேற்றுமைகள் திணிக்கப்பட்டது எப்படி? ஆட்சியிலும் ஆவணத்திலும் மக்கள் வழக்கிலும் திருக்கோயில் வழிபாட்டிலும் இருந்த தமிழ் புறக்கணிக்கப்பட்டது ஏன்? திருக்கோயில்கள், ஊர்கள், மக்கள் பெயர்கள், கலப்பு மொழிகளாக வடமொழிப் பெயர்களாக மாறியது எப்படி? இவற்றைச் செய்தது யார்? கெடுமதியா? சதியா? விதியா? இல்லை விதியன்று. நம் அறியாமையும் ஒரு கூட்டத்தாரின் திட்டமிட்டுச் செய்த சதியே ஆகும். அரசர்கள் மற்றும் ஆள்வோர்க்கு அணுக்கமாக இருந்து அதிகார நிலையிலும் காலூன்றிய மேட்டுக் குடியினரின் சதிச் செயலே தமிழும் தமிழ்ச் சமுதாயமும் பின்னிலைக்குத் தள்ளப்பட்டதற்குக் காரணமாகும்.

**உண்ணாநிலைப் போராட்டம்**

பழையாறைச் சிவன் கோயிலில் சிவலிங்கத்தை யாரோ மறைத்துவிட்டனர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் திருநாவுக்கரசரால் அச்சிவலிங்கத்தை மீண்டும் கொண்டு வந்து வைத்தாலன்றித் தான் உண்ணுவதில்லை என்ற உண்ணா நிலைப் போராட்டம்

மேற்கொள்ளப்பட்டது எனில் இந்திய நாடு விடுதலை பெற அண்ணல் காந்தியடிகளுக்கும் இந்தியாவுக்கும் வழிகாட்டியது சேக்கிழாரின் சீரிய நெறியே ஆகும் எனில் மிகையாகாது. அவர் நெறியைப் பின்பற்றித் தமிழ் வழிபாட்டு நெறியை பரப்பவும் ஓங்கவும் செய்ய வேண்டியது நம் கடமையாகும். சேக்கிழார் தமிழகத்தின் பல்வேறு சமுதாய மக்களின் வாழ்வியல் நெறிகள் பலவற்றைப் புலப்படுத்தியுள்ளார். அவற்றை ஈண்டு விரிப்பின் பெருகும்.

**முடிவுரை**

"நம் சமயம் அன்புச் சமயம்"

என்பார் குன்றக்குடித் திட்டத்தை நாட்டுக்குக் காட்டிய தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்"
"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் நன்றே நினைமின்"
"யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே"

என்பன திருமூலர் வாக்குகளாகும்.

"அன்பின் வழியது உயிர்நிலை"
"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்"
"இன்சொலினதே அறம்"

என்பன திருவள்ளுவர் காட்டும் அன்பு நெறியாகும். இவையாவும் சென்றிணையும் சீரிய நெறியே சேக்கிழாரின் செந்தமிழ் நெறி; சீர்திருத்த நெறி என உணர்வோம்; உய்யும் நெறி பெறுவோம்!

(முற்றும்)

திருமந்திரம் அன்பின் வடிவமாகச் சிவத்தைப் பார்க்கின்றது. ஆடம்பர, ஆர்ப்பாட்ட, ஆரவாரச் சடங்குகளைவிட, எளிய வழிபாடே இறைவனுக்கு ஏற்றது என உரைக்கின்றது; மன்னுயிரெல்லாம் தன்னுயிர் போலப் போற்றச் சொல்கிறது; நடமாடும் திருக்கோவில்களாம் மானுடத்திற்குச் செய்யும் தொண்டு மகேசனுக்குச் செய்யும் தொண்டு என்று முழங்குகிறது.

**- பொன்னம்பல அடிகளார்**

# உழைப்பு ரேகை

(கவிஞர். அ.சொ. சண்முகம்)

மொட்டு மூடியிருப்பினும்
இதழ்களை விரித்து
மணம் தெளிக்கிறது
மற்றவரை மகிழ்விக்க.

ஓடுகள் மூடியிருப்பினும்
உயிர்களை உருவாக்கி
உதவுகிறது புள்ளினம்
உலகம் இயங்க.

தோகை மூடிய மயில்
மழைமேகம் கண்டால்
அரங்கேற்றுகிறது
அற்புதமாய் ஆட்டத்தை!

மெலிதான மேகப்புகையும்
மழையாய்ப் பொழிந்து
மகிழ்வு கொள்கிறது
மண்ணை வாழவைக்க.

சிறிய எறும்புகளும்
சுறுசுறுப்பாய் இயங்கி
வரிசையாய்ச் செல்கின்றன
வாழ்க்கைக்கு வழிகாட்ட!

வெறுங்கைகளென எண்ணி
மூடிவைத்து முடங்கிக் கிடக்கும் மனிதனே!
உள்ளங்கையை உற்றுப்பார்!
உன்னை உயர்த்தத்தானே
ஓடுகிறது உழைப்பு ரேகை.

---

# சிந்தனை வட்டம்

மக்கள் சிந்தனையின் 24ஆம் ஆண்டு முதல் இதழே சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் ஊன்றுக்கோலாக அமைந்துள்ளது! தலையங்கத்திலிருந்து அனைத்துப் பகுதிகளும் மக்கள் மனதில், "மெய்ப்பொருளாக" மதித்து பதித்துக்கொள்ள வேண்டும். கைநழுவிப்போன ஆண்டுப் பிறப்பை தைத்திங்கள் முதல் நாளில் நிலைப்படுத்த உணர்த்திய தலையங்கச் சொற்கள், பொன்னெழுத்துக்களாய் ஒளிர்கின்றன! ஒவ்வொரு ஆண்டின் மார்கழி நிறைவில், "மண்மாதா...." எனத்தொடங்கும் விளக்கத்தை அனைவரும் புத்தாண்டு வாழ்த்தாக அனுப்பி மகிழலாம். "தல மரங்கள்" விளக்கத்தை எல்லாத் திருக்கோயில்களும் (குறிப்பாக 90 கோயில்களில்) பார்வைக்கு வைத்து மக்கள் உணர்ந்து வழிபடச் செய்தல் நலம்.

"தமிழ் வழிபாடு", முழுக்க ஆன்மீகப் புரட்சியாக – சாட்டையடியாக – "மேற்சென்று இடிப்பதாக" அமைந்துள்ளது. "தமிழ் வழிபாடு ஏன் வேண்டும்" தலைப்பில் அமைந்த 6 பாராக்களையும் திரும்பத் திரும்பப் படித்தால், நல்லதொரு நெறியைக் கடைப்பிடித்து வழிபட மனவுறுதி ஏற்படும்.

ஆக, நல்ல சிந்தனைகளைக் கொண்டு சமய சமுதாய நலத் தொண்டுகளைப் பரப்பும் "மக்கள் சிந்தனை" இதழ், வளத்துடன் புகழுடன் வளர வாழ்த்துகிறேன்.

"பற்றுமிகுந்து மக்கள் சிந்தனை இதழைப்
படித்திடப்படித்திடப் பெருகும் ஞானம்!"

– கலைமாமணி.நெல்லை ஆ. சுப்பிரமணியன்
உறையூர்.

மேலை நாடுகள் உருப்பெருக்கி வழியே விண்மீன்களைத் தேடிக்கொண்டிருந்தபோது காலத்தைத் துல்லியமாய்க் கணிக்கும் பெரும் கணியன்கள், வான சாத்திர வல்லுநர்கள் தமிழ் மன்னர்களின் அரசவையில் நிரம்பி வழிந்தார்கள். – 2ம் பக்கத்தில் உள்ள வரி மிக அருமை.

சென்னை, வி.நாகசுந்தரத்தின் தமிழ்வழிபாடு கட்டுரை மிக நன்று. புலவர் வீ.செ. கந்தசாமி எழுதிய கவிதையில் கடைசி 8 வரிகள் மிக நன்று. 6.12.2008ல் கோவையில் நிகழ்ந்த முப்பெருவிழா செய்தி நன்று. விழாவில் எடுத்த புகைப்படங்களையும் நூலில் பிரசுரித்து இருந்தால், நேரில் பார்ப்பது போல இருந்திருக்கும்.

– காசி ஸ்ரீ. V.G. தெய்வேந்திரன், அருப்புக்கோட்டை.

மக்கள் சிந்தனை இதழில் தைத் திங்கள் சிறப்பைப்பற்றி தவத்திரு குன்றக்குடி அடிகளார் கூறிய கருத்துக்கள் கற்கண்டாய் இனித்தன மனதில் நிறுத்தி மகிழ்வாய் வாழ்ந்திட வழி வகுத்துள்ளது. பாராட்டுக்கள்! ஆதீனப் புலவர் மரு. பரமகுரு படைப்பாகிய பறம்புமலை – திருக்கொடுங்குன்றம் – திருப்பூர்த் தமிழ்ச் சங்கத்தின் 2007ம் ஆண்டிற்கான இலக்கிய விருது பெற்றமை அறிந்து பெரிதும் மகிழ்ந்தேன். ஆதீனப்புலவர் மரு. பரமகுரு வழங்கிய தலமரங்களும் – திருத்தலங்களும் பற்றிய விவரம் அறிந்து அளவில்லாது மகிழ்ந்தேன். மக்கள் சிந்தனை மனதைக் குளிர வைத்தது. வாழ்த்துக்கள்.

– சி. சண்முகானந்தம், கோபாலசமுத்திரம்.

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

# பழநி

## பரிமள விலாஸ்

# S.சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி

## &

## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**

அடிவாரம், பழநி - 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406




# அருள்நெறி முழக்கம்

ஆசிரியர் :
தவத்திரு குன்றக்குடி அடிகளார்

விலை : 40/-
பக்கங்கள் : 96பக்கங்கள்

**அருள்நெறி பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்







## சமய வாழ்வு

விலை : ரூ. 40/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

## காற்றில் வந்த கருத்துமழை

விலை : 70/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

ஆசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

**திருமாறன் பதிப்பகம்**
7/8 பீட்டர்ஸ் குடியிரு...
இராயப்பேட்டை
சென்னை - 600 014



MAKKAL CHINTHANAI - Feburay 2009 Price Rs. 5-00
Date of Publication 20-02-2009
Register of News Paper for India No. 85913/81 Register No. KKD/04/2009-2011









பெறுநர்

திரு அருள் திரு
ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி - வழி
அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166